THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The answer [a] is placed on the table of the House.

SRI R. SRINIVASA IYER : இந்தப் பதிலில் கொடுக்கப்பட்டிருப்பதில் எவ்வளவு தொகை எய்டாகக்கொடுக்கப்பட்டிருக்கிறது என்கிற புள்ளி விவரம் இருக்கிறது. இவ்விதம் கடன் வாங்குகிறவர்கள் எந்தெந்தக் காரணத்திற்காக வாங்குகிறார்களோ அந்தக் காரணத்திற்காக சரியாக பிரயோசனப்படுத்துகிறார்களா என்பதைப் பற்றி விசாரணை செய்ய அதிகாரிகள் யாராவது நியமிக்கப்பட்டிருக்கிறார்களா ? அப்படியானால் எங்கேயாவது இவ்விதம் தவறுதல்கள் நடந்திருப்பதாக சர்க்காருக்குத் தகவல்கள் வந்திருக்கின்றதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தத் தகவல் இப்போது என்னிடம் இல்லை. சாதாரணமாக இந்தக் கடன்கள் சரியான முறையில் உபயோகிக்கப்படுகின்றனவா என்று கவனிக்கப்பட்டு வருகிறது. தவறுதல்கள் நடக்கின்றது என்று சர்க்காருக்குத் தகவல்கள் ஏதாவது வந்தால் அதன் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

SRI J. MATHA GOWDER : சிறிய தொழில்களை ஊக்குவிப்பதற்காக கடன்கொடுக்கும் பட்டியலில் தேயிலை உற்பத்தி செய்யக்கூடிய தொழிலுக்கு இந்த எய்ட் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. அதற்குக் காரணம் என்னவென்று தெரியவில்லை. ஆகவே இனிமேலாவது தேயிலை உற்பத்திக்கு கடன் கொடுக்க சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தேயிலை உற்பத்தி செய்கின்றவர்கள் சேர்ந்து அரசாங்கத்திற்கு விண்ணப்பித்துக்கொண்டால் அரசாங்கம் அதைப் பற்றிப் பரிசீலனை செய்யும்.

## *Industrial development*

* 1702 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நமது ராஜ்ய கைத்தொழில் இலாகாவுக்கு மத்திய சர்க்கார் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்திற்கு ஒதுக்கிய பணம் யாவும் செலவு செய்யப்பட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir.

## Tamil Text-books (10th Standard).

* 1703 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இவ்வாண்டு பத்தாவது வகுப்பிற்கு (10th Standard) தமிழ்ப் புத்தகங்கள் (Tamil Texts) இதுவரை கிடைக்கவில்லை என்பது உண்மையா ?

(இ) இதனால் பாடங்களைக் குறைக்க வேண்டுமென்று ஆசிரியர்களுடைய கோரிக்கை சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா ?

(உ) அப்படியானால், அதைக் குறித்து சர்க்காரின் முடிவென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Under the existing arrangements text-books for detailed study in the several languages for the S.S.L.C. Public Examination are printed and published by the Madras University. It has been ascertained that the Tamil text-books for the S.S.L.C. (X Standard) Public Examination 1962 were released for sale on 29th July 1961.

(இ) Yes, Sir.

[a] Printed as Appendix II on pages 504–506 *infra*.

22nd September 1961]

(2) The question of deleting some portions from study in subjects where there was delay in the release of text-books has already been considered by the Commissioner for Government Examinations. A notice indicating the portions to be omitted has been despatched to all schools. It has also been published in the *Fort St. George Gazette*.

SRI S. M. ANNAMALAI : ஸார், இவ்விதம் காலதாமதமாகி புத்தகங்கள் வெளியானதற்குக் காரணம் என்ன ?

THE HON SRI C. SUBRAMANIAM : இந்தப் புத்தகங்களை அச்சடிப்பதற்கான தாள்கள் வந்து சேருவதற்கு காலதாமதமாகிவிட்டது என்று சொல்லியிருக்கின்றார்கள். என்னைப் பொறுத்தவரையில் ஒவ்வொரு வருட ஆரம்பத்தில்தான் அச்சடிக்க வேண்டும் என்று காத்திருக்க வேண்டியதில்லை. முன்னாலேயே அச்சடித்து காலாகாலத்தில் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யலாம் என்பதுதான் என் கருத்து. இவ்விதம் சொல்லும்போது சர்வகலாசாலையினர் ஏதோ அதன் அதிகாரத்தின் மீது அரசாங்கமும் இந்த சட்ட சபையும் தலையிடுகிறது என்று சொன்னாலும் சொல்லலாம்.

SRI M. KALYANASUNDARAM : இம்மாதிரி காலந்தாழ்ந்து புத்தகங்கள் வெளியிடுவதினால் மாணவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். ஆகவே, இந்தப் புத்தகத்திற்கான மானஸ்கிரிப்டை அரசாங்கமே பெற்று அதை அரசாங்கமே அச்சடித்துக் கொடுப்பதற்கு நடவடிக்கை எடுப்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதில் இருக்கக்கூடிய சங்கடம் என்னவென்றால், இந்த அரசாங்கமும், சட்டசபையும் தெரியாத விஷயத்தில் தலையிடுகிறார்கள் என்று ஒரு மாய உணர்ச்சி சர்வகலாசாலையினருக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்த எண்ணம் சீக்கிரத்தில் போகவேண்டியது அவசியம் என்று எண்ணுகிறேன். சீக்கிரத்தில் போய்விடும் என்றும் எண்ணுகிறேன். ஆகவே அவர்களே இதை எடுத்துக் காலாகாலத்தில் அச்சடித்துக் கொடுக்க முயற்சி எடுக்க முடியும். சர்க்கார்தான் எடுத்து நடத்த வேண்டும் என்பதில்லை.

SRI M. KALYANASUNDARAM : இம்மாதிரி காலதாமதம் ஏற்படுவதினால் பொதுமக்களும் குறிப்பாக சட்டசபை அங்கத்தினர்களும் அதிருப்தி அடைகிறார்கள் என்கிற விவரத்தை யூனிவர்சிடி நிர்வாகத்தினருக்கு அரசாங்கம் அறிவிப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றிச் சொல்லும்போது தெரியாத விஷயத்தில் இவர்கள் சொல்லுகிறார்கள் என்று அவர்கள் எண்ணக்கூடும். எப்படியானாலும் இதைப் பற்றித் தெரிவிப்பதற்கு முயற்சி செய்கின்றேன்.

SRI K. VINAYAKAM : Even in this belated issue of text-books, is the Hon. Minister aware of the fact that several mistakes have been detected in a rudimentary book like the Tamil tex-book and what steps have been taken to rectify those mistakes?

THE HON. SRI C. SUBRAMANIAM : Those mistakes have not been brought to my notice. Perhaps the University authorities might think that they are the best or competent authorities to decide whether a particular tex-book is correct or incorrect.

SRI M. KALYANASUNDARAM : பல்கலைக் கழகத்தார் வெளியிடும் புத்தகங்களை அங்கத்தினர்கள் படித்துப் பயன் பெறுவதற்கோ அல்லது அவற்றிலுள்ள குறைகளை அறிந்துகொள்வதற்கோ, அந்தப் புத்தங்களை அசெம்பிளியின் நூல் நிலையத்தில் வைக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

[22nd September 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தப் புத்தகங்கள் எல்லா இடங்களிலும் கிடைக்கக்கூடியவைதான். இதைப் பற்றி அங்கத்தினர்களுக்கு அக்கரையிருக்குமானுல் அதைப் பற்றி எழுதினுல் கவனிக்கிறேன்.

*Housing scheme*

* 1704 *Q.*—SRI N. K. PALANISAMI (on behalf of SRI A. GOVINDASAMY) : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether there is any scheme to construct houses for labourers in Messrs. T.A.S. Limited, Vadapathimangalam, under the Industrial Scheme;

(*b*) if so the amount of subsidy granted by the Government; and

(*c*) whether any foundation was laid, if so by whom, and on what date?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

(*c*) No information is available.

*Textile mills—Allotment of spindles*

* 1705 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state with reference to the answer given to the Question No. 1184, dated 30th March 1961 whether this Government have reecived any reply from the Centre regarding the allotment of spindles to the textile mills?

THE HON. SRI V. RAMAIAH : Yes, Sir. The Government of India have allotted 75,000 spindles to this State under the Third Five-Year Plan.

SRI N. K. PALANISAMI : Sir, what is the number of spindles to be allotted to co-operative spinning mills if they are to be started for each district?

THE HON. SRI V. RAMAIAH : I do not have the information here.

SRI N. K. PALANISAMI : May I know whether the spindles would be allotted only to the private sector or whether they will be distributed to co-operative spinning mills also?

THE HON. SRI V. RAMAIAH : The information available with me is that no decision has yet been taken.

*Long distance Express buses—(Air conditioning of)*

* 1706 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether the Government have arrived at any decision regarding the air-conditioning of long route express buses; and

(*b*) if so, when?